REGD. NO. M.:6511 ★ தனி இதழ் 0—1—0 (7 காசுகள) ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி. மு. க. தின இதழ் — ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.



## நாட்டில் 'பட்டினி' என்ற நிலைமை இல்லையாம்!

புதுடில்லி, மே 20—

"யார் என்ன சொன்னபோதிலும், இந்த நாட்டில் யாரும் பட்டினியாகக்கிடக்கவில்லை! சேரிகளின் நிலைமை எனக்குத் தெரியும்; சேரிகள் மோசமாகத்தான் இருக்கின்றன; ஆனால், அங்கே எவரும் பட்டினியாக இருக்கவில்லை. அவர்களுடைய துணிகள் அழுக்கடைந்திருக்கலாம்; ஆனால் அவர்களுக்குத் துணிப்பஞ்சமில்லை."

—மத்திய நிதி மந்திரி டி. டி. கிருஷ்ணமாச்சாரி.

மலர் 4] சென்னை: வைகாசி 7உ திங்கள் (20—5—57) ★ ★ வெளியூர்: வைகாசி 8உ செவ்வாய் (21—5—57) இதழ் [292

# பண்டா எதேச்சாதிகார எக்காளம்: நேரு ஒப்பம்

## இலங்கை வாழ் தமிழர் பிரச்சினையில் கால தாமதத்திற்குக் காரணம்?

### பண்டித நேருவின் புதிய தத்துவ ஆராய்ச்சி

கொழும்பு, மே 19—

"இன்றைய நாட்களில் உலகமே மாறிவிட்டது. தன்னுடைய ஆதிக்கத்தை அண்டையிலுள்ள நாடுகளுக்கெல்லாம் பரப்பி அவற்றைத் தன் ஆட்சியில் கொண்டுவரும் நாடுதான் பெரிய நாடு என்று பழங்காலத்தில் கருதப்பட்ட கொள்கை, இப்புதிய காலத்திற்கு அக்கொள்கை ஏற்றதாகாது. ஏனெனில், சோஷலிசத்தை எதிர்நோக்கி விரைந்தோடும் எந்த ஒரு நாடும், தன்னுடைய அளவுக்கு மேற்பட்டவகையில் மற்ற நாடுகளைத் தன் ஆட்சிக்குக் கொண்டுவர விரும்புவது கிடையாது; அவ்வாறு செய்வதானுல், சோஷலிசத்தை எதிர்நோக்கிச் செல்லும் அவைகளின் குறிக்கோள் விரைவில் நிறைவேறவொட்டாதபடி செய்யும் தடையாகவே இது அமையும் என்று அவைகள் கருதுகின்றன. இப்போது ஒவ்வொரு நாடும் விரும்புவதெல்லாம், தனது அண்டை நாடுகளுடன் சுமுகமான உறவுநிலை வேண்டும் என்பதுதான்.

"இலங்கையில் இப்போதிருந்து வருகிற ஆபத்தெல்லாம் இந்தியாவிலிருந்தோ, அல்லது வேறெந்த நாடுகளிலிருந்தோ கிளம்பியுள்ளதல்ல; அந்த நாட்டிலேயே ஏற்பட்டுள்ள வேறு சில பிரச்சினைகள் தான் அதற்குக் காரணம். அந்தப் பிரச்சினைகளையெல்லாம் தீர்க்காவிட்டால் அவைகள் உங்களை நிச்சயம் நலிவுறச் செய்யும்"

—இவ்வாறு, இலங்கையில் நடைபெற்ற பொதுக்கூட்டமொன்றில் பேசுகையில் பண்டித நேரு குறிப்பிட்டுவிட்டு, மேலும் சொன்னுர்:—

"நம்மைத் துன்புறுத்துகின்ற சில பிரச்சினைகள் நம்முன் இருக்கத்தான் செய்கின்றன. சில சமயங்களில் என்னதான் தீவிர—தகுந்த நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டாலும் கூட அவைகளைச் சுலபமாக—சுமூகமாகத் தீர்க்க முடியாமற்போய்விடுகிறது.

"எந்த ஒரு பிரச்சினையையும் எடுத்துக்கொண்டு அதற்குப் பரிகாரம் தேட முனையும்போது, அது எவ்வளவுதான் கடினமான பிரச்சினையாக இருந்தாலும் அவைகளையெல்லாம் நேர்மையான முறையில்—நட்புணர்ச்சியுடன், ஒருவருக்கொருவர் கூட்டு மனப்பாங்குடன்—ஒருவரை ஒருவர் நன்ருகப் புரிந்துகொண்டு அணுகவேண்டியவர்களாக இருக்கிருேம். இப்படி நடந்துகொண்டாலே போதும்; குறைந்தபட்சம், எடுத்துக்கொண்ட பிரச்சினையில் பாதிஅளவு கஷ்டத்தை நீக்கியவர்களாகிவிடுவோம்.

"எந்தப் பிரச்சினையையும், மனித உணர்ச்சியுடன் ஆராய வேண்டும்.

"சில குறிப்பிட்ட தலைவர்கள், இந்தியா ஒரு பெரிய நாடு என்றும், ஆகவே, பெரிய நாடாக இருக்கும் இந்தியா தனது இராணுவத் துருப்புகளை அனுப்பி, இலங்கையைக் கைப்பற்றிவிடும் என்றும் கூறி அச்சுறுத்திவருகிருர்கள். இந்தக் கேள்விக்கு நான் கூறக்கூடிய ஒரே பதிலெல்லாம், இப்படிக்கூறுவது அப்பட்டமான முட்டாள்தனமாகும் என்பதைத் தவிர வேறல்ல! அப்படிக் கூறுபவர்களையெல்லாம்—என்னுடைய வார்த்தைகளை அவர்கள் காதில் போட்டுக்கொள்ளாவிட்டாலுங்கூட—அது எப்படி நடைபெற முடியும் என்ருவது தங்களைத் தாங்களே சிந்தித்துப் பார்க்கும்படியாகவேனும் நான் கேட்டுக்கொள்வேன்.

"இந்தியா இப்படிச் செய்யுமானுல் அதற்குக் கிடைக்கும் இலாபந்தான் என்ன? ஒன்றும் இல்லை!"

## நம்பிக்கை மூலமே சிக்கல்களுக்குப் பரிகாரம் காண முயலுகின்றனர்!

### நிலவிவரும் 'உறவு' வலுப்பெற இந்தியா-இலங்கை பிரதமர்கள் சந்திப்பு வழிகோலுமாம்

கொழும்பு, மே 20—

"இந்தியாவிற்கும் இலங்கைக்குமிடையேயுள்ள சில பிரச்சினைகளில் சுமூகமான பரிகாரங்கள் ஏற்படுவதற்கான அறிகுறிகள் இருந்துவருகின்றன"

என்று, இந்தியா—இலங்கைப் பிரதமர்கள் வெளியிட்டுள்ள அறிக்கையில் நம்பிக்கை தெரிவித்துளார்கள்.

இப்போதைய நிலையில் இந்தியா—இலங்கை ஆகிய இரு நாடுகளுக்குமிடையே பல துறைகளில் நிலவிவரும் 'ஒருமைப்பாடு' இத்தகு பிரச்சினைகளையெல்லாம் இரு நாடுகளுக்கும் சாதகமான முறையில் தீர்த்துவைக்க உதவும் என்றும் அவ்விருவரும் தங்கள் 'தளரா நம்பிக்கை'யைத் தெரிவித்திருக்கின்றனர்.

இதன் விளைவாக, இந்த இரு நாடுகளுக்கும் இப்போது இருந்துவருகிற 'உறவு' மேலும் மேலும் வலுப்பெற்று முழுமையுறும் என்றும், தங்களின் இந்த நம்பிக்கையை உறுதி செய்யும் அடையாளமாகவே தங்களிருவரின் சந்திப்பு குறித்துத் தங்கள் தங்கள் நாட்டில் எழும்பியுள்ள கருத்துக்கள் காணப்படுகின்றன என்றும் அவர்கள் 'மனப்பூர்வமாக நம்பிக்கை' தெரிவித்திருக்கின்றனர்.

## கிராம அதிகாரிகள் பதவிக்குப் பட்டதாரிகள் போட்டியாம்!

### பரம்பரை உரிமையைப் போக்க வேண்டுமென்கிருர் ஆந்திர முதல்வர்

ஐதராபாத், மே 19—

ஆந்திர மாநிலத்தில் கிராம அதிகாரிகள் ஊதிய உயர்வு கோரியும், மற்றும் சில சலுகைகள் கோரியும் போராட்டம் நடத்தி வருகின்றனர்.

இதை சுட்டிக்காட்டி நிருபர்கள் கேட்டதற்கு, முதலமைச்சர் சஞ்சீவி ரெட்டி பதிலளிக்கையில், கிராமாதிகாரிகள் பதவியை தலைமுறை தலைமுறையான ஒரே குடும்பத்தினர் வகித்து வருவதை ஒழித்துவிட்டு, நேர்முகமாக தேவையானபோது ஆட்களைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும் என்று தான் விரும்புவதாகவும், மாவட்டங்களிலிருந்து வேறு இடத்திற்கு மாற்றப்படுவதை கிராம அதிகாரிகள் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும், கில அளவில் தேர்ச்சி பெற்ற ஏராளமான பட்டதாரிகள் தற்போது கிராம அதிகாரிகளாக பணியாற்ற விரும்புவதாகவும் தெரிவித்ததுடன், ஆந்திர மாநிலத்தில் கிராம அதிகாரிகள் கோடி நடவடிக்கையில் ஈடுபட்டிருப்பதைக் கண்டித்துள்ளார்.

## 10,000 தொழிலாளர்கள் வேலையின்றித் தவிப்பு

### 120 சணல் தொழிலாளர்கள் கைது

கல்கத்தா, மே. 18—

மேற்கு வங்கத்தில் நான்கு சணல் ஆலைகள், மூடப்பட்டுவிட்டதால் 10,000 தொழிலாளர்கள் வேலை இழந்துவிட்டதாகச் செய்தி ஒன்று தரப்பட்டிருக்கிறது.

நகரில் 144 தடை உத்தரவு பிறப்பிக்கப் பட்டிருக்கிறதாம். ஆலையில் வேலை செய்து வந்த 120 தொழிலாளர்களுக்கு ஆலை முதலாளிகள் தரவேண்டிய பிராவிடண்ட் நிதியை தரவில்லையாம். இந்த அநீதியை ஆட்சியாளருக்கு எடுத்துரைக்கச் சென்ற 120 தொழிலாளர்களும் தடை உத்தரவை மீறிய குற்றத்திற்காகக் கைது செய்யப்பட்டுள்ளனராம்.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## புதுவரிகள் கண்டன நாள்

### 26-5-57 ஞாயிறன்று நாடெங்கும் எதிர்த்து முரசறைவீர்

26—5—57 ஞாயிற்றுக்கிழமையை, புதிய வரிகள் விதிப்பிற்கு நாடெங்கும் கண்டனம் தெரிவிக்கும் நாளாகக் கொண்டு, ஆங்காங்கு அமைதியான முறையில், ஊர்வலங்கள், பொதுக் கூட்டங்கள் நடத்தி மக்களின் எதிர்ப்புக் குரலை, தீர்மானங்கள் மூலம் காட்டி, இந்தியப் பேரரசினரும், சென்னை அரசினரும் உணரும்படி ஆவனவெல்லாம் செய்ய முன்வருமாறு தி. மு. கழகத் தோழர்களையும், கழக ஆதரவாளர்களையும், பொதுமக்களையும் வேண்டிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

20—5—57
'அறிவகம்'
சென்னை-13

**இரா. நெடுஞ்செழியன்**
பொதுச்செயலாளர், தி. மு. க.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## வருமான வரி செலுத்துவோர்

### 9 இலட்சம் பேர்களாம்!

புதுடில்லி, மே: 20—

புதிய வருமான வரி விதிப்பின் மூலம் நாட்டில் வருமான வரி செலுத்துவோரின் எண்ணிக்கை ரூ. 9 இலட்சமாக உயர்ந்துள்ளது. இதுவரை நாட்டில் 5 இலட்சம் பேர்களே வருமான வரி கட்டி வட்டி வந்தவர்கள்.

## ஐந்தாண்டு காலத்தில் ஒரே நிமிடம் பேசிய மக்கள் சபை உறுப்பினர்!

### 69 பேர் ஒன்றுமே பேசவில்லையாம்!

புதுடில்லி, மே 20—

இந்தியப் பாராளுமன்றத்தின் நினைவு மலர் வெளியிடப்பட்டுள்ளது. அதில் உறுப்பினர்கள் ஆற்றிய சொற்பொழிவுகளின் புள்ளி விவரங்கள் அடங்கியுள்ளன:—

500 உறுப்பினர்கள் கொண்ட பழைய மக்கள் சபையில் 69 பேர், அவர்கள் பதவி வகித்த 5 ஆண்டு காலத்தில் ஒரு முறைகூட பேசியதில்லையாம்!

46 உறுப்பினர்கள், கடந்த 5 - ஆண்டு காலத்தில் ஒரே ஒரு முறை பேசியுள்ளனராம்!

22 பெண் உறுப்பினர்களில் ஒருவர் மட்டும் பேசாமடந்தையாக இருந்துள்ளாராம்!

தாகூர்தாஸ் பர்கவா என்ற உறுப்பினர் 288 சந்தர்ப்பங்களில் மொத்தம் 80 மணி நேரம் பேசியுள்ளாராம்!

அவருக்கு அடுத்தபடியாக சாட்டர்ஜி என்ற உறுப்பினர் 191 - முறை ஆற்றிய பேச்சுக்கு 51 - மணி 46 நிமிடங்கள் எடுத்துக் கொண்டுள்ளாராம்.

நிதி அமைச்சராக இருந்த சி. டி. தேஷ்முக் 187 முறை பேசுவதற்கு மொத்தம் 72 மணி 5 நிமிடங்கள் எடுத்துக்கொண்டுள்ளாராம். இவர்தான் அரசாங்கத்தின் சார்பில் அதிக நேரம்—அதிக முறை பேசியவர்.

பண்டித நேரு 85 சந்தர்ப்பங்களில் பேசி மொத்தம் 45 மணி 29 நிமிடங்கள் எடுத்துக்கொண்டுள்ளாராம்!

அமைச்சர்களில் மிகக் குறைவாக பேசியவர் ஆசாத்; இவர் ஆறுமுறை மட்டுமே பேசியுள்ளாராம்!

அசாம் மாநில உறுப்பினர் அம்சாத் அலி, ஐந்தாண்டு கால பார்லிமெண்டரி வாழ்க்கையில் ஒரே ஒரு நிமிடம் ஒரு முறை பேசியதுதான் குறைந்தபட்சம் பேசியதென்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.

---

சென்னை, மே 18—

விநோபாவிடம் நிலக் கொடையாக வழங்கப்பட்ட 200 கிராமங்களில் உள்ள 40,000 ஏக்கர் நிலத்தில் உடனே சாகுபடி செய்வதற்கு சென்னை அரசாங்கம் ரூ. 20 இலட்சம் கடன் வழங்க முன்வந்துள்ளதாம்.

Best copy available.

Roja Muthiah Research Library
3rd Cross Road, C P T Campus
Taramani, Chennai 600 113,

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

சென்னை 20—5—57 திங்கள்




# வரிக் குண்டுகள்!

அணுகுண்டின் அழிவு சக்தியைவிட, பெருங்கேடு பயப்பதாக ஏதாவது ஒன்று இருக்கிறது என்றால் அது நிதி அமைச்சர் டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் அவர்களின் வரிக் குண்டாகத்தான் இருக்க வேண்டும். இதில் இருகருத்துக்கு இடமே கிடையாது.

அணுகுண்டாவது மனித குலத்தையே சுட்டெரித்துச் சாம்பலாக்கிவிடக்கூடும். அது விழுந்த இடத்தில் புல் முளைப்பதும் பல்லாண்டுகாலத்துக்கு முடியாது போகும் எனக் கூறப்படுகிறது.

ஆனால் நிதி அமைச்சர் வீசியுள்ள வரிக் குண்டுகளோ, மக்களைக் கொல்லாமல் கொல்லும் அற்புத ஆற்றல் பெற்றிருப்பவையாக உள்ளன. மக்களை உயிருடன் வைத்துக்கொண்டே, கொடுஞ்சித்திரவதை செய்து, மெள்ளமெள்ளச் சாகடித்து விடக்கூடிய அதியற்புத சக்தி நிதி அமைச்சரின் வரிக் குண்டுகளுக்கு உள்ளன எனக் கூறுவது மிகைபடக் கூறியதாகாது.

"எந்த வகையிலும் நமது முயற்சியின்மை காரணமாக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் நெருக்கடிக்குள்ளாகக்கூடாது. என் வரி விதிப்புகளுக்கு இதுவே மூலக் கோட்பாடாகும்"

என, தனது சாதாரண ஏழை எளியவர்களை வாட்டி வாட்டி வருத்திக் கொல்லும் புதிய வரி விதிப்புகளுக்கு நியாயம் காட்டி இருக்கின்றார் நிதி அமைச்சர். இவ்வாறு நிதி அமைச்சர் குறிப்பிட்டு விட்டதினாலேயே இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட ஏற்பாடுகளும், அவைகளைச் செயலாற்றுவதற்கென அவர் விதித்துள்ள கொல்லாமல் கொல்லும் கொடும் நஞ்சுக் கொப்பாக இருக்கும் புதுவரிகளும் நியாயமானது, மிக மிகத் தேவையானது, கட்டாயம் வெற்றியைத் தரக்கூடியது என்று ஏற்பட்டுவிடாது.

"சாதாரண மனிதன் மீது சுமையை ஏற்றி இருக்கின்றேன் என்பதை நான் மறுக்கவில்லை. ஆனால் நான் அதைப் பரவலாக்கி இருக்கின்றேன். இன்றும் எனது வரவு-செலவுத் திட்டத்தில் பற்றாக்குறை இருக்கிறது. இதனால் அதிக வாங்கும் சக்தியை உருவாக்க என்றால் இயலவில்லை"

என்று கூறுவதின் மூலம், வரி விதிப்பின் தன்மையையும், விளைவுகளையும் நிதி அமைச்சர் ஒப்புக்கொண்டுள்ளார். அவ்வாறு அவர் ஒப்புக்கொண்டுள்ள காரணத்தினாலேயே, பெரும்பான்மையினராக உள்ள ஏழை எளிய மக்களுக்கு, அவர் இயற்றியுள்ள தீமையும் கொடுமையும் குறைந்துவிடப் போவது கிடையாது.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்திலும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும், தென்னாடு பெற்றுள்ள பங்கின் அளவை அடிப்படையாக வைத்து, இரண்டாவதுத் திட்ட வெற்றிக்கென காரணங்காட்டி விதித்துள்ள புது வரிகளின் நியாயாநியாயத்தை நாம் ஆராய்வதற்கு முன், பொதுப்படையாக திட்டம் வெற்றி பெறுவதால் ஏற்படக்கூடிய விளைவுகள் குறித்து முதற்கண் ஆராய்வோம்.

எடுத்துக்காட்டாக முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் வெற்றிகரமான நிறைவேற்றத்தினால், சாமானிய மக்கள் பெற்றுள்ள பலன் என்ன என்பதைப் பார்ப்போம்.

பொதுவாக மக்கள் அனைவருடையவும் வாழ்க்கைத் தரம் உயர்ந்திருக்கின்றதா? பொதுவாக வேலையில்லாத் திண்டாட்டம் குறைந்திருக்கின்றதா? படித்தவர்களிடை வேலையின்மை எத்தனை சதவிகிதம் குறைந்திருக்கின்றது? படிக்காதவர்களில் எத்தனை சதவிகிதம் பேர் வேலை பெற்றுள்ளனர்?

முதல் ஐந்தாண்டுத் திட்ட வெற்றியின் விளைவாக உணவுப் பண்டங்களின் உற்பத்தி பெருகி இருக்கிறதா? அதன் பலனாக ஏற்படவேண்டிய விலை மலிவு ஏற்பட்டு இருக்கின்றதா?

முதல் திட்ட நிறைவேற்றத்தின் காரணமாக உணவுப் பொருட்களின் உற்பத்தி கூடியிருப்பதாக ஏட்டில்காட்டப்படுகிறது. ஆனால், விலையில் மட்டும் குறைந்த பட்சக் குறைவும் ஏற்பட்டதாகக் காணோம். விலை கூடிக்கொண்டே போகிறது.

முதலாண்டுத் திட்டத்தின் வெற்றி ஏட்டளவில்தான் இருக்கிறது. மக்கள் வாழ்க்கையில் அவ்வெற்றியைக் கடுகளவும் காணமுடியவில்லை.

இந்த நிலையில் இரண்டாவது திட்டத்தின் வெற்றிக்காக, சக்திக்கு மீறிய வரியைக் கொடுக்கவேண்டும் என சாதாரண மக்களைக் கெடுபிடி செய்ய நிதிஅமைச்சர் முன்வந்து இருக்கின்றார்.

நாளை கிடைக்கப்போகும் பலாப்பழத்திற்காக, இன்று கையில் உள்ள கனிப் பழத்தை வீசி எறிந்துவிடவேண்டும் எனப் பொதுமக்களை வற்புறுத்துகிறார் நிதி அமைச்சர்.

இரண்டாம் திட்ட முடிவில் பொதுமக்களுக்குக் கிடைக்க இருப்பது பலாப்பழமாக இருக்குமா என்பது விவாதத்திற்குரியதாகும். ஐயத்திற்குரிய ஒரு பயனைக்காட்டி, கையிலுள்ளதையும் இழக்க வேண்டும் எனப் பொதுமக்களைக் கசக்கிப்பிழிவது நிதி அமைச்சரின் புத்திசாலித்தனத்தைக் காட்டுவதாக இல்லை. நிற்க,

இந்த மக்களில் பெரும்பான்மையினர் அரைவயிறு கால்வயிறு உண்பதையே பன்னெடுங்கால வழக்கமாகக் கொண்டுள்ளனர். கிடைத்தால் புசிப்பது என்ற போக்கில், வேறு கதியற்ற நிலையில் மக்கள் இங்கு வாழ்ந்துவருகின்றனர்.

அரைவயிறு கால்வயிறு, அதிலும் சத்தற்ற உணவை உண்டு வருகின்றவர்கள் விதவிதமான தொத்து நோய்களுக்கு ஆளாகி இளமை மரணம் அடைவதில் வியப்பில்லை. உலகத்திலேயே இளமையில் இறப்போர் தொகை, அதிலும் கொடிய தொத்துநோய்களுக்கு பலியாகி மறிப்போர் தொகை இந்தியத் துணைக் கண்டத்தில்தான் மிகுதியாகும் என்பது மறக்கமுடியாத உண்மையாகும்.

கொடிய தொத்து நோய்களைத் தடுக்க, அந்நோய்களை இயல்பாகத் தடுக்கக்கூடிய ஆற்றல் பெரும்பாலான மக்களுக்கு ஏற்பட்டாக வேண்டும். அவ்வாற்றல், சத்துள்ள உணவை தேவையான அளவில் உட்கொள்வதின் மூலம்தான், மக்கள் அனைவருக்குக் கிடைக்கக்கூடும். இக்கருத்தைப் பின்னணியாகக்கொண்டு நிதி அமைச்சர் புது வரி ஏற்பாடுகளைப் பார்க்குமிடத்து, எவருக்கும் ஏமாற்றமும் அச்சமுமே ஏற்படும். தொத்து நோயைத்தடுக்கும் ஆற்றலுடையவர்களாக, சத்தான உணவை வழங்கி பொதுமக்களை ஆக்க வேண்டியதற்கு பதிலாக, இருக்கும் ஆற்றலையும் ஒழித்துக் கட்டும் போக்கில் நிதி அமைச்சரின் வரி விதிப்புகள் அமைந்துள்ளன என்றே கூறவேண்டியதாகிறது.

அணு குண்டுகளை விட கொடுந் தொத்து நோய்களை பரவச் செய்யும் கிருமிக் குண்டுகள், மக்களுக்கு பெருங்கேடு பயப்பனவாகும். அக்கிருமி குண்டுகள் போன்று பொதுமக்களை ஒரேயடியாகக் கொன்றுவிடாமல் சித்திரவதை செய்து மெள்ள மெள்ள உயிர் குடிக்கக்கூடிய பயங்கரமான விளைவுகளைக் கொண்டிருப்பது தான், நிதி அமைச்சர் டி. டி. கிருஷ்ணமாச்சாரியாரின் வரிக் குண்டுகள் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது.

# மக்கள் துயரத்தின் மீது மாபெரும் திட்டங்களா?

## நடுத்தர வகுப்பினர் கசக்கிப்பிழியப்படுவர்

## ஏழை மக்கள் மிகச் சிரமப்படுவர்

டில்லியின் புதிய வரி விதிப்புக்களுக்குக் கண்டன மழை

டில்லி சர்க்காரின் புதிய வரி விதிப்புகள், ஏழை—எளிய—நடுத்தர மக்களை எப்படி எல்லாம் பாதிக்கும் என்று விளக்கி தமிழக இதழ்கள் முழக்கியுள்ள கண்டனங்களைக் கீழே தருகிறோம் :—

### 'தமிழ்நாடு':

"பாராளு மன்றத்தின் ஒரு புதிய வரவு—செலவுத் திட்டம் வருகிறதென்றால், மக்களுடைய உள்ளத்தில் அச்சமும் கவலையும் தான் அதிகரிக்கின்றன.

"வரிச்சுமைகளால் மக்கள் இன்னலுற்று வருந்தும் நிலையில் மேலும் மேலும் அதிக வரிகளை விதித்துவருவது அரசாங்கத்தின் இயல்பான நடைமுறையாகி விட்டதால், ஒவ்வொரு வரவு—செலவுத் திட்டத்திலும் புதிய வரிகள் ஏற்படுவது வியப்பைத் தோற்றுவிக்கும் எல்லையையும் கடந்து விட்டது.

"வியப்பு நீங்கி விட்டாலும், துயரத்தின் தன்மை நீங்காதாகையால் புதிய வரிச்சுமைகளால் தோன்றும் இன்னல்கள் ஆழ்ந்து சிந்திக்கத்தக்கவை.

"அரசாங்கத்தின் வரி விதிப்புக் கொள்கை, சிறிது சிறிதாக பெரும்பான்மையினரான பொது மக்களையும் நோடியாகப் பாதிக்கும் முறைக்கு வந்துவிட்டது.

"நிதி அமைச்சரின் புதிய வரவு—செலவுத் திட்டம், நடுத்தர வாழ்க்கைப் பகுதியினரையும் எளியோர்களையும் வருத்தும் நிலையில் அமைந்துள்ளது.

"வாழ்க்கைக்கு இன்றியமையாத தேவைப் பொருள்களின் மீது வரி விதிப்பதில்லை என்ற அரசாங்கத்தின் பொதுவான கொள்கை கூட இப்போது கைவிடப்பட்டு வருவது பெரிதும் வருந்தத்தக்கதாகும். இது மட்டுமல்லாமல், ஏழை மக்கள் பயன்படுத்திவரும் பொருள்களின் விலை மேலும் உயரும் தன்மையில் வரிகள் அதிகப்படுத்தப் பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

"அஞ்சல் அட்டைகள் தேயிலை, காப்பி, தீப்பெட்டி முதலியவற்றின் மீதுள்ள வரிகள் அதிகப்படுத்தப் பட்டிருப்பது ஏழை மக்களுக்குத் தொந்தரவு கொடுக்கும் என்பதை நிதி அமைச்சரும் மறுக்கவில்லை.

"இன்றியமையாத தேவைப் பொருள்களின்மீது வரி விதிக்கக் கூடாதென்பது உண்மையென்றாலும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் குறிக்கோள்களை நிறைவேற்றுவதற்கு வேறு வழியில்லை என்று அவர் வாதிக்கிறார்.

"மக்களுக்காகத்தான் திட்டமே ஒழிய, திட்டத்திற்காக மக்களல்ல என்ற கருத்தை இங்கு அடிக்கடி குறிப்பிட்டுள்ளோம்.

"திட்டத்தின் குறிக்கோள்களுக்காக மக்களை வருத்திப் பொருள் சேகரிப்பது நல்லரசுப் பண்பிற்கு முரண்பாடானது என்பதை காந்தியடிகளின் நெறியைப் பின்பற்ற நினைக்கும் தலைவர்கள் நன்கு உணரவேண்டும்.

"இரயில் பயணக் கட்டணங்களின் உயர்வு, வருமான வரி விதிப்பு வரம்பின் விரிவு முதலியவற்றால் ஏழைகளும் நடுத்தர வகுப்பினருமே பெரிதும் இன்னலுறுவார்கள்.

"பேருக்கத்தினாலும், பேருழைப்பின் உதவி கொண்டும் செல்வப் பெருக்கை மிகுதியாக்க விரும்பியவர்களெல்லாம், தளர்வுற்று, ஊக்கத்தை இழந்து, உழைப்பைக் குறைக்கும் அளவில் வரி விதிப்புக் கொள்கைவிளக்கம் பெற்றுள்ளது.

"இந்நிலைமை நம் நாட்டைத் தொடர்ந்து பீடிக்குமானால், பொருளாதார வாழ்வும், சமுதாய முன்னேற்றமும் பெயரளவில்கூட இல்லாமல் மறைந்துவிடும்.

"மக்களுடைய துயரத்தின் மீது மாபெரும் திட்டங்களை எழுப்புவதைவிட, அவர்களுடைய மன நிறைவின் அடிப்படையில் குறைந்த குறிக்கோள்கள் வெற்றி பெறுவதே சாலச் சிறந்ததாகும்"

★

### 'தினமணி':

"டி. டி. கிருஷ்ணமாச்சாரி சமர்ப்பித்துள்ள முழு வருடத்துக்கான முதல் பட்ஜெட்டை 'புது வரி பட்ஜெட்' என்று கூறுவது மிகையாகாது.

"சாதாரணமாக முந்திய வரித் திட்டங்களில் சிறு மாறுதல்கள் இருக்கும்; புதிய வரிகள் அபூர்வமாகத்தான் விதிக்கப்படும்; ஆனால் டி.டி.கே., பழைய ஏற்பாட்டில் விரிவான மாறுதல்களைச் செய்திருக்கிறார். செல்வத்தின்மீதும் செலவுகள்மீதும் வரி போட்டிருக்கிறார்.

"செல்வத்தை மதிப்பிட்டு வரி விதிப்பது இரண்டு மூன்று நாடுகளில் இருந்துவரும் ஏற்பாடு; ஆனால், செலவுகள்மீது வரி என்பது, சில பொருளாதார நிபுணர்களின் கற்பனையில் மட்டுமே இது வரை இருந்து வந்தது; அதை உருவாக்கி உலக சரித்திரத்திலேயே முதல் தடவையாக நடத்திவைக்க முன்வந்துள்ளார் டி.டி.கே.

"பெட்ரோல், டீசல் எண்ணெய், உருக்கு, சிமிட்டி, சர்க்கரை, தீப்பெட்டி, கச்சாப் புகையிலை, தாவர எண்ணெய், காபி, தேயிலை, காகிதம் உட்பட 13 இனங்கள்மீது 'எக்சைஸ்' தீர்வைகள் உயர்த்தப்பட்டுள்ளன. இவை மூலம் கிடைக்கும் 53·20 கோடி ரூபாயில் ராஜ்யங்களுக்கு 4 கோடி ரூபாய் கிடைக்கும்.

"ஆனால் இந்த வரிகளெல்லாம் சாமானிய மக்கள்மீது பளுவைச் சுமத்துகின்றவை தாம்!

"சாதாரணமாக இரயில் கட்டணங்களை இரயில்வே இலாகா தான் நிர்ணயிப்பது வழக்கம். சாமான்கள்மீது கட்டணங்களை இரயில்வே மந்திரியே உயர்த்தி விட்டார்.

"நமது வரி விதிப்பின் சரித்திரத்திலேயே முதல் தடவையாகப் பிரயாணிகளின் கட்டணத்துக்கு 5 சதவிகிதம் முதல் 15 சதவிகிதம் வரை நிதி மந்திரி வரி போட்டிருக்கிறார். 30 மைல் முதல் 500 மைல் வரையுள்ள பிரயாணங்களுக்கு 15 சதவிகிதம் வரி விதித்திருப்பது நியாயமற்றது. ஏழைகளை இது மிகக் கடுமையாகப் பாதிக்கும். இதைக் கணிசமாகக் குறைப்பது அவசியம். இரயில்வே வரி உயர்வின்மூலம் கிடைக்கும் எட்டு கோடி ரூபாயும் ராஜ்யங்களுக்குத்தான் என்றாலும், இந்த விகிதாச்சார உயர்வு மிகக் கடுமையானது.

"தபால் கார்டு 'நயே பைசே' கணக்கில் முதலில் கிராக்கியாகி இப்பொழுது 6 பைசாவாக (ஒரு அணா) உயர்த்திவிட்டதும் ஏழைகளைப் பாதிக்கும். தபால் கட்டணங்கள் ஏற்கனவே கட்டுப்படியாகவில்லை என்று நிதி மந்திரி சொல்வது சரியல்ல. முந்திய ஆண்டுகளிலேயே தபால் தந்தி இலாகா இலாபத்திலேயேதான் வேலை செய்திருக்கிறது. எதிர்பார்த்ததைவிட 4 கோடி அதிக வருமானம் கிடைத்துள்ளது.

"எனவே, கார்டு விலையைக் கூடுதலாக்கி, சில லட்ச ரூபாய்கள் அதிகம் கிடைக்கச் செய்ய நியாயமே இல்லை. இது அநாவசியமான எரிச்சலை உண்டுபண்ணும் பிரேரணை.

"புத்தக பார்சல்களுக்குத் தரப்பட்டுள்ள சலுகை அடையாள பூர்வமானதுதான். இது வெகுவாகக் குறைக்கப்பட வேண்டிய கட்டணம்.

"பட்ஜெட்டில் சேர்க்கப் படாத இனம் ஏதாவது இருக்கிறதா என்று பார்த்தால், 'இல்லை' என்ற பதில்தான் கிடைக்கும். நான்கு நோக்கங்களுடன் தமது பட்ஜெட் தயாரிக்கப்பட்டிருப்பதாக நிதி மந்திரி கூறுகிறார்—(1) வருமான உயர்வின் அவசியம்; (2) அதிகம் சம்பாதித்து அதிகம் மிச்சப்படுத்த ஊக்கமளிப்பது; (3) பல பண்டங்களை கிராக்கியாக்கி, அவற்றில் செலவிடுவதைக் கம்மிப்படுத்திசேமிப்பு அதிகரிக்க வழிசெய்வது; (4) சோஷலிஸ்டு சமுதாய அமைப்பு என்ற இலட்சியத்தைக் கருத்திற் கொண்டு வரி அமைப்பை உருப்படுத்துவது.

"மூன்றுவது அம்சந்தான் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது.

"ஏராளமான பண்டங்களின் விலை, 'எக்சைஸ்' வரி விதிப்பினால் கூடுதலாவது கண்கூடு. ஆனால் இதன் விளைவாக கிராக்கி குறைந்து,

(4-ம் பக்கம் பார்க்க)



# வினோபாவின் பூதான இயக்கம் பிச்சைக்கார இயக்கமாம்!

## உ. பி. காங்கிரஸ் எம். பி.-யின் தாக்குதல்

கிருஷ்ணசந்திர சர்மா என்ற உத்திரப்பிரதேசத்தைச் சேர்ந்த காங்கிரஸ் எம். பி., வினோபா அவர்களின் பூதான இயக்கத்தை மிகக் கடுமையாகத் தாக்கியுள்ளார்.

மக்கள் சபையில் பேசிய அவர் குறிப்பிட்டதாவது:—

"ஒரு அரசு தனது மக்களுக்காக நிலப் பிச்சை எடுத்துக்கொண்டிருக்குமானால், நீண்டநாள் நீடிக்காது; எல்லா நிலங்களையும் ஒன்று சேர்த்தல், நிலம் சிறு சிறு துண்டுகளாகப் பிரிந்துகிடப்பதை ஒழித்தல், குடியானவர்களுக்கு பாதுகாப்பு தருதல் இவைதான், நிலப் பிரச்சினைக்குப் பரிகாரமாகும்; பூதான இயக்கங்களை விட இவைதான் பரிகாரம் தேடித் தரும். நான் பூதானத்தைப் பற்றி அதிகமாக மதிப்பதில்லை. பிச்சைக்காரர்களால் ஒரு அரசை நிர்மாணிக்கமுடியாது."

குறிப்பு:— வினோபாவின் பூதான இயக்கத்தை, சென்னை கவர்னர் (காங்கிரஸ்காரர்) ஜான் அவர்கள், தனது சட்டசபை உரையில் வெகுவாகப் பாராட்டிப் புகழ்ந்திருந்தார். சென்னை மந்திரிகளும், 'பூதான இயக்கமே நிலப் பிரச்சினைக்குப் பரிகாரம்,' என்று கூறினர், அண்மையில் தான்!

# கல்விக்கு ஒதுக்கியது ரூ. 25·87 கோடியாம்!

## 1957-58 'பட்ஜெட்' இலட்சணம்

புதுடில்லி, மே 17—

1957—58-ம் ஆண்டிற்கு நாட்டின் கல்வி வளர்ச்சிக்காக மொத்தம் ரூ. 25,87,00,000 மட்டுமே ஒதுக்கப்பட்டுள்ளதாம்.

அதில் ஆரம்ப ஆசிரியர்களின் ஊதிய முறையை மாற்றியமைப்பதற்கு ரூ. 2 கோடி மட்டும் ஒதுக்கப்பட்டுள்ளது.

மற்றும், ஆதாரக் கல்வி படித்தும் வேலையற்றிருப்பவர்களுக்கு ரூ. 5,20,00,000-மும், செகண்டரி கல்விக்காக ரூ. $4\frac{1}{4}$ கோடியும், பல்கலைக் கழகங்களுக்கு மானியமாக ரூ. 4,17,00,000-மும், அரசாங்கம் நடத்தாத கல்லூரிகளுக்கு ரூ. 5,02,000-மும், செகண்டரி பள்ளிகளுக்கு ரூ. 4,53,000-மும், மற்ற மாநில மொழிகள் அபிவிருத்திக்காக ரூ. 15,11,000-மும், உடற்பயிற்சி விளையாட்டுகளுக்கு ரூ. 52 இலட்சமும், செகண்டரி கல்விக் குழுவிற்கு ரூ. 36 இலட்சமும், வெளிநாடுகளுக்குச் சென்று படிப்பவர்களுக்கு ரூ. 3,77,000-மும், தாழ்த்தப்பட்டோர், மலைசாதியினர் ஆகியவர்களின் கல்வி முன்னேற்றத்திற்காக ரூ. $1\frac{1}{2}$ கோடியும் ஒதுக்கப்பட்டுள்ளது.

# தேசீய எழுச்சியில் பங்கு பெற்றனராம்!

## 14 பேர்களுக்கு தூக்கு தண்டனை

புதாபெஸ்ட், மே 16—

வட கிழக்கு அங்கேரியில், சென்ற ஆண்டு தோன்றிய சுதந்திர எழுச்சியின்போது 7-போலீசாரைக் கொன்றதாகவும், எதிர்ப்புரட்சிக்காரர்கள் என்றும் குற்றம் சாட்டப்பட்ட 14 பேர்களுக்கு புதாபெஸ்ட் நீதிமன்றம் ஒன்று மரண தண்டனை விதித்திருக்கிறது.

### மற்றும் ஏழு பேர்

மற்றும் ஏழுபேர்கள்மீது இதே குற்றச்சாட்டுகள் சுமத்தப்பட்டது என்றும், அவர்களில் நால்வருக்கு ஆயுள் தண்டனையும், ஒருவருக்கு 15 ஆண்டு சிறைத் தண்டனையும், மற்றும் இருவருக்கு பத்தாண்டு சிறைத் தண்டனையும் விதிக்கப்பட்டதாம்.

அங்கேரி மக்கள் குடியரசைக் கவிழ்ப்பதற்கு முயற்சித்தார்கள் என்பதுதான் பிரதான குற்றச்சாட்டாம்!

### ஒரு பத்திரிகையாளருக்குத் தூக்கு

அங்கேரி பத்திரிகையாளர் ஒருவருக்கு, அங்கேரியில் கம்யூனிஸ்டு சர்க்காரை வீழ்த்த முயற்சித்தார் என்றும், அதற்காக மக்களைத் திரட்டினார் என்றும் குற்றம் சாட்டப்பட்டு புதாபெஸ்ட் மக்கள் நீதிமன்றம் ஒன்று தூக்குத் தண்டனை விதித்துத் தீர்ப்பு கூறியிருக்கிறது.

# தற்காலிகமாகக் கைவிட்டுவிட்டதாம்!

டெலவிவ், மே 17—

சூயஸ் கால்வாய் வழியாக ஒரு கப்பலை அனுப்பி தனது உரிமையை நிலைநாட்டிக்கொள்ளப் போவதாக இஸ்ரேல் முடிவு செய்திருந்ததல்லவா? இந்த முடிவை தற்காலிகமாக இஸ்ரேல் கைவிட்டுவிட்டதாம்.

ஆனால் இஸ்ரேல் வேறு சில அந்நிய வல்லரசுகளைக் கலந்து ஆலோசித்த பின், தன்னுடைய முடிவை மாற்றிக்கொண்டுள்ளதாம்.

சூயஸ் வழியாகச் செல்ல ஏற்பாடு செய்யப்பட்ட 'மார்ஸ்' என்ற இஸ்ரேல் கப்பல், பனமா வழியாக ஜப்பான் செல்ல வேண்டும் என்று இப்போது உத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளதாம்.

# இலங்கையின் கடற்பரப்பு?

## சிக்கல் எழுமானால் சமரசம் காண வழிகோலப்படும்

கொழும்பு, மே. 16—

இலங்கையையொட்டிய கடற்பரப்பில் இந்திய அரசாங்கம் தனது அதிகாரத்திற்குட்பட்ட நீர்ப்பரப்பின் அளவை 3 மைலிலிருந்து 6 மைல்களாக உயர்த்தி அறிக்கை ஒன்று வெளியிட்டிருக்கிறது.

இதையொட்டி இலங்கை அரசாங்கம், தனது அதிகாரத்திற்கு உட்பட்ட நீர்ப் பகுதியையும், இந்துமகா சமுத்திரத்தில் மீன் பிடிக்கும் உரிமையுள்ள பகுதிகளையும் வரையறுத்து அதிகாரபூர்வமான அறிக்கை ஒன்றை வெளியிட முடிவு செய்துள்ளதாம்.

அறிக்கை வெளியான பிறகு இரு அரசாங்கங்களுக்கிடையே சிக்கல்கள் எழுமாயின் சமரசமாக கலந்து பேசி சிக்கல்களை தீர்த்துக் கொள்ள இலங்கை அரசு முடிவு செய்துள்ளதாம்.

★★★★★★★★★★★★★★★★

# கிளைக் கழகங்கள்—கழகத் தோழர்கள்—கழக ஆதரவாளர்கள் கவனத்திற்கு :

"வளர்ந்துவரும் நம் கழகத்தின் வலிவு—பொலிவுகளைக் கண்டும், கழகத் தோழர்கள் ஒருவருக்கொருவர் ஒன்றிப் பழகிக் குடும்பப் பாசத்துடன் நடந்து கொள்வதைப் பயன்படுத்திக் கொண்டும் நமது கழகத்தைச் சேராத—கழகக் கொள்கைகளுக்கு ஒரு சிறிதும் ஒருமைப்படாத சிலர், ஆங்காங்கு சுற்றித்திரிந்து கிளைக் கழகங்களையும், கழகத் தோழர்களையும் அணுகி, கழகத் தோழர்கள் எனத் தங்களை அறிமுகப்படுத்திக் கொண்டு ஏமாற்றிப் பொழுது போக்குவதும், பொருள் பறிப்பதுமான இழி செயல்களில் இறங்கி இருப்பதுபற்றி அவ்வப்போது ஆங்காங்கிருந்து தலைமை நிலையத்திற்குச் செய்திகள் கிடைத்து வருகிறது.

கிளைக் கழகத் தோழர்களும், கழக அனுதாபிகளும் மேற்குறிப்பிட்டது போன்ற பொறுப்பற்ற மனிதர்களிடம் எச்சரிக்கையாக நடந்து கொள்ளும்படியும், எத்தகைய இழப்புக்கும் ஆளாகாதிருக்கும்படியும் வேண்டிக் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

—தலைமைக் கழகம் (தி. மு. க.)

★★★★★★★★★★★★★★★★

# நன்றியறிவிப்பு

12—5—57 காலை 10-30 மணியளவில், சென்னை இராயபுரம் 'அறிவகத்தில்' நடைபெற்ற (சென்னை மாவட்டத்தில் காலியாயிருந்த) பொதுக்குழு உறுப்பினர் இடைத் தேர்தலில், தங்கள் வாக்குகளை அளித்து எங்களைத் தேர்ந்தெடுத்த சென்னை மாவட்ட தி. மு. கழகப் பிரதிநிதிகள் அனைவருக்கும் உளங்கனிந்த நன்றியறிதலை தெரிவித்துக் கொள்கிறோம். வணக்கம்.

ஏ. எஸ். இராமன்
வ. சங்கரநாராயணன்
சி. பஞ்சாட்சரம்

எர்ணாகுளம், மே 17—

மேற்குக் கடற்கரையில் இரண்டாவது கப்பல் கட்டும் துறை எங்கு ஏற்படுத்துவது என்பதைப் பற்றி மாநிலங்களின் யோசனைகளை மத்திய அரசு கேட்டிருக்கிறது.

இப்போது இங்கிலாந்திலிருந்து வந்துள்ள கப்பல் கட்டும் நிபுணர் குழு கொச்சிக்குச் சென்று அங்குள்ள வசதிகளை ஆராய்ந்து, முடிவை மத்திய அரசாங்கத்திற்கு அறிவிப்பார்களாம்.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

# கிளைக் கழகச் செயலாளர்களுக்கு அறிவிப்பு

★

சிற்றூர்—பேரூர்—நகரக் கிளைக் (சென்னை நகரில் வட்டம்) கழகங்களில் ஏற்படும் நிர்வாகிகள் மாறுதல் குறித்தும், புதிய கிளை திறக்கப்பட்டு தேர்ந்தெடுக்கப்பட்ட நிர்வாகிகள் விபரமும் நேரடியாகத் தலைமைக் கழகத்திற்கு அனுப்பாமல், அந்தந்த மாவட்டச் செயலாளர் (அல்லது துணைச் செயலாளர்) பார்வைக்கு அனுப்பி அவரது கையொப்பத்துடன் அனுப்பிவைக்குமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

'நம் நாடு' இதழில் பிரசுரிக்க அனுப்பும் நிர்வாகிகள் மாறுதல், புதிய நிர்வாகிகள் விபரம் போன்றவைகளும் மாவட்டச் செயலாளர் கையொப்பத்துடன் அனுப்பிவைத்தால்தான் பிரசுரிப்பதற்கு வசதிப்படும் என்பதும், இதன்மூலம் தெரிவித்துக் கொள்ளப்படுகிறது.

—தலைமைக் கழகம் (தி. மு. க.)

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

ஆசிரியருக்குக் கடிதம்:

# கீழ்பவானி தீர்வை விகிதம்

ஐயா,

கீழ்பவானி பாசனப் பிரதேசத்தில் புதிய தீர்வை விகிதம் நிர்ணயிக்கப்பட்டு, சம்பந்தப்பட்ட விவசாயிகளின் கருத்தும் கோரப்பட்டிருக்கிறது.

அலங்கோலமான தீர்வை முறையினாலும், தாங்கொணாத தண்டத் தீர்வையினாலும் கீழ்பவானி விவசாயிகள் அனுபவித்து வருகின்ற அல்லல்கள் ஏராளம்! இதுபற்றி விவசாயிகள், அரசாங்கத்திடம் அடிக்கடி முறையிட்டு வந்திருக்கிறார்கள். மாநாடுகள், பொதுக்கூட்டங்கள், மகஜர்கள் எனப் பல வகைகளில் விவசாயிகளின் குறைகள் வெளியிடப்பட்டுள்ளன.

இவ்வளவுக்குப் பிறகு அரசாங்கம் புதியதோர் தீர்வை விகிதத்தை நிர்ணயித்திருக்கிறார்கள்!

கீழ்பவானி பாசனப் பகுதியில் உள்ள நிலங்களை மூன்று வகையாகப் பிரித்து, முதல்தரம் நஞ்செய்ப் பயிர்களுக்கு ஏக்கர் ஒன்றுக்கு ரூ. 20 தீர்வையும், இரண்டாம்தரம் தோட்டப் பயிர்களுக்கு ரூ. 15 தீர்வையும், மூன்றாம் தரம் மானவாரி—காட்டுப் பயிர்களுக்கு ரூ. 12 தீர்வையும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இதனை ஆட்சேபிக்கும் விவசாயிகள் 30—5—57-க்குள் தெரிவித்துக் கொள்ள வேண்டுமென்றும் அறிவிக்கப்பட்டுள்ளது.

இதுபற்றிய அறிவிப்பு, சம்பந்தப்பட்ட விவசாயிகள் அறியும்படி செய்வதில் அதிகாரிகள் சிரத்தை எடுத்துக்கொள்ளவில்லை. இந்த முக்கியமான பிரச்சினையில் விவசாயிகளின் கருத்தை நன்கு தெரிந்துகொள்வதற்கு அரசாங்கமும் அதிகாரிகளும் வழக்கமான 'தண்டோரா' முறையையே துணையாகக் கொண்டுவிட்டார்கள். ஆகவே, இது பற்றிய அறிக்கை இன்னமும் அனேக இடங்களில் கிராம அதிகாரிகளின் இல்லங்களிலேயே அடைபட்டுக் கிடக்கிறது. பெரும்பாலான விவசாயிகளுக்கு இதுபற்றி இன்றுவரை எதுவுமே தெரியாது.

இந்த நிலையில், ஆங்காங்குள்ள பொதுநல ஊழியர்கள் கிளர்ந்தெழுந்து, விவசாயிகளின் கருத்தை எதிரொலிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது.

புதிய தீர்வை விகிதம் கீழ்பவானி விவசாயிகளின் சுமையை எவ்விதத்திலும் குறைக்கவில்லை. தீர்வையுடன் 'சர்சார்ஜ் செஸ்' முதலியவற்றையும் சேர்த்துப் பார்த்தால் விவசாயிகளை வாட்டும் வேதனையின் முழு உருவம் தெரியும்.

இதனைக் கண்டித்தாக வேண்டும்; விவசாயிகளின் ஆட்சேபக் குரல்கள் எழுந்தாக வேண்டும்; புதிய தீர்வையைச் சரிபாதியாகக் குறைக்கும்படி கோரிக்கைகள் கிளம்ப வேண்டும். இதைக் கண்ணுறும் விவசாயிகளும் பொதுநல ஊழியர்களும் உடனடியாக முயற்சி மேற்கொண்டு விவசாயிகளின் ஆட்சேபணைக் குரலை அரசாங்கம் அறியச்செய்ய வேண்டுகிறேன்.

ஜி. ஏ. வேங்கடாசலம்,
கோபிசெட்டிபாளையம்.

★

# காங்கிரசார் கண்ணியம்?

ஐயா,

இவ்வூரில் சமுதாய நல இலாகாவினரால் நடத்தப்பட்ட மக்கள் விழாவில், ஒவ்வொரு நாள் இரவும் ஒவ்வொரு கிராமத்திலுள்ள நாடக மன்றங்களும் நாடகம் நடத்த ஏற்பாடு செய்திருந்தனர்; அம்முறையில், தேசுமுகப்பேட்டை மன்றத்தினரையும் நாடகம் நடத்த அழைத்ததால் 10—5—57 இரவு 'அரக்கு மாளிகை' நாடகம் நடத்த ஒப்புக் கொண்டோம்.

ஆனால் அதற்கிடையில்—9—5—57ல் அமைச்சர் கக்கன் அவர்கள் வந்தபோது, இங்குள்ள சில காங்கிரஸ்காரர்கள், 'அரக்கு மாளிகை' தி. மு. க. நாடகம்; அதை நடத்த அனுமதிக்கக் கூடாது எனக் கூற, அமைச்சர் அவர்கள், பொதுமக்கள் முன்னிலையில், 'அரக்கு மாளிகை' நாடகம் நடத்த அவர்களே முன்வந்திருக்கக்கூடாது; ஆனால் வந்துவிட்டார்கள் என்றால், கூடுமானவரை நீக்கவேண்டியவைகளை நீக்கி, சுமுகமாக நடத்தி விடுங்கள்,' என மேடையில் கூறிவிட்டு, பிறகு செல்லும்போது தனியாக சமுதாய நல அதிகாரியை அழைத்து, 'எதிர்காலத்தை எண்ணி எச்சரிக்கையோடு நடந்துகொள்,' எனக் கூறிச் சென்றுவிட்டார்!

இதையே காரணமாக வைத்து இங்குள்ள காங்கிரஸ்காரர்கள், சமுதாயநல அதிகாரிக்கு அவர் பதவி பறிக்கப்பட்டுவிடும் என அச்சுறுத்தியதன்பேரில், அதிகாரி அவர்கள் மன்றத்தினரை அணுகி, 'என் வேலைக்கே பாதம் ஏற்படும் போல் இருக்கிறது; தயவு செய்து நாடகத்தை நிறுத்திக் கொள்ளுங்கள்,' என வேண்டிக் கேட்டுக் கொண்டதிற்கிணங்க, மன்றத்தினர் காரணகாரியங்களை ஆராய்ந்து, கழகத்தின் கடமை—கண்ணியம்—கட்டுப்பாடு கருதி பெருந்தன்மையாக விட்டுக் கொடுத்துவிட்டனர்.

காங்கிரஸ்காரர்களின் கீழ்த்தரமான செயல்களையும், மாற்றுக் கட்சியினருக்கு அடிக்கடி கொடுத்துவரும் தொல்லைகளையும் பொதுமக்கள் கட்டுமீறிய உணர்ச்சியோடு பேசிக்கொண்டு சென்றது குறிப்பிடத்தக்கது.

ஆ. இரத்தினவேல்
தேசுமுகப்பேட்டை

★

# திருச்சி மாவட்ட மன்றம் கவனிக்குமா?

ஐயா,

ஆசிரியர்கட்கு மாதா மாதம் 15-ந் தேதிக்குள் இதற்கு முன் சம்பளம் கிடைத்தது; ஆனால், கடந்த இரண்டு மாத காலமாக 30-ந் தேதி கூட கிடைப்பதில்லை. இதில், முதல்மாதச் சம்பளத்தை அடுத்த மாதம் 15-ம் நாள் பெற முடிகிறது. இதுவும் தவறி, தற்போது 30-ந் தேதி வாவில்லை என்றால், மூன்றுவது மாதந்தான் ஒரு மாதச் சம்பளத்தைப் பெற முடிகிறது.

கிராமப் பகுதிகளிலும், வெளியூர்களிலும் இருக்கும் ஆசிரியர்கள் இந்நிலையில் 3 மாதச் செலவுக்கு இன்னல்பட நேரிடுகிறது. ஆகவே, இனிமேலாவது திருச்சி மாவட்ட மன்றத்தார் இதற்கு ஆவன செய்து ஆசிரியர்கள் நலனில் அக்கறை கொள்வார்கள் என நம்புகிறேன்.

ஆ. ஆறுமுகம்,
அரியலூர்.

# கேரளத்தில் இந்திய சர்க்கார் அச்சகம்

## மக்கள் சபையில் தகவல்

புதுடில்லி, மே 18—

'கேரளத்தில் இந்திய சர்க்கார் அச்சகம் ஒன்றை ஏற்படுத்துவதற்காக நிலம் ஆர்ஜித நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன' என்று, மத்திய அமைச்சர் கே. சி. ரெட்டி மக்கள் சபையில் தெரிவித்துள்ளார்.

அச்சக நிர்மாண வேலை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் கடைசிக்குள் பூர்த்தி செய்யப்படும் என்றும், தற்போதைய ஏற்பாட்டின்படி, அச்சகத்தில் சுமார் 400 பேர் வேலை செய்வார்கள் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

One side of the page is dark

## கழகக் கூட்டங்கள்

★

**தென்னம்புலம்:**
21—5—57 அன்று
தி. மு. கழகத் துவக்க விழா
தலைவர்:
சி. முருகேசன்
பேசுவோர்:
அறிவுடைநம்பி
சி. கிருஷ்ணமூர்த்தி
சிவ. கனகசுந்தரம்

★

**பம்பாய்—மாதுங்கா:**
நியூ கார்டன்
21—5—57 இரவு 7 மணிக்கு
தலைவர்:
இ. சு. ச. பிச்சையா
பேசுபவர்:
நாஞ்சில்-கி. மனோகரன்

★

**சின்னாளப்பட்டி:**
வள்ளுவர் திடல்
22—5—57 மாலை 6 மணிக்கு
தலைவர்:
சு. துவாரகதாஸ்
பேசுவோர்:
க. அன்பழகன்
எம். வீரணன்
மெய்யப்பன்

★

**வீரசோழபுரம்:**
22—5—57 மாலை 6 மணிக்கு
பேசுபவர்:
கே. ஏ. மதியழகன்
(வீரசோழபுரம், குடந்தை — அரியலூர் 'பஸ்' பாதையில் லோயர் அணைக்கட்டுக்கு வடக்குப்புறத்தில் 2 கல் தூரத்தில் இருக்கிறது.)

★

**மேலக்குடிக்காடு:**
நடுத்தெருவில்
22—5—57 மாலை 5 மணிக்கு
தி. மு. கழகத் துவக்கவிழா
தலைவர்:
மு. கலியபெருமாள்
பேசுவோர்:
சா. இராமசாமி
போ. தருமன்
கோ. சி. மணி
வீ. காளிதாஸ்
ம. கோ. மணி

★

**ஆலங்குடி:**
கடைத் தெருவில்
22—5—57 மாலை 6 மணிக்கு
பேசுவோர்:
என். வி. நடராசன்
காளிதாஸ்

★

**புதுப்பட்டினம்:**
22-5-57 மாலை 5-30 மணிக்கு
தலைவர்:
ஆர். கே. பி. பிச்சைக்கண்ணு
பேசுவோர்:
என். எஸ். இளங்கோ
நா. தர்மலிங்கம்
கலாநேசன்
கு. அடைக்கலம்
எம். கிருஷ்ணமூர்த்தி
எஸ். இராமையன்

---

**வ. ஆ. மாவட்ட தி.மு.க.**

## செயற்குழுக் கூட்டம்

"26-5-57 பிற்பகல் 3மணிக்கு வேலூர் டவுன்ஹாலில், வட ஆற்காடு மாவட்ட தி. மு. கழகச் செயற்குழுக் கூட்டம் நடைபெறும்; அதுபோது, (1) மாவட்ட மாநாடு பற்றி முடிவெடுத்தல்; (2) புதிய கிளைகளை ஏற்றுக்கொள்ளுதல்; (3) செயலாளரால் கொண்டு வரப்படும் இதர தீர்மானங்கள் ஆகியவை பற்றி ஆராயவிருப்பதால் உறுப்பினர்கள் தவருது வருகைதர கேட்டுக் கொள்கிறேன்,"

என்று வடாற்காடு மாவட்ட தி. மு. கழகச் செயலாளர் தோழர் முல்லை-சத்தி அறிவிக்கிறார்.

## புதிய வரி விதிப்புக்குக் கண்டனம்

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

சேமிப்பு பெருகுமென்று நம்புவதற்கு முந்திய அனுபவம் இடந்தரவில்லை.

"சாமான்ய மக்கள்மீது வரிப்பளு ஏறுகிறது என்பதை தாம் அறிந்திருப்பதாக நிதிமந்திரி கூறுகிறார். ராஜ்ய நிதி மந்திரிகள் விற்பனை வரிகளை சகட்டு மேனிக்குக் கூட்டப் போகிறார்கள். மத்திய சர்க்காருக்கு 'எக்சைஸ்' தீர்வை பயன்படுவதுபோல, விற்பனை வரி ராஜ்ய சர்க்கார்களுக்குப் பயன்படுகிறது. இந்த இரண்டுமாகச் சேர்ந்து, குறைந்த வருமானக்காரர்களின் வாழ்க்கையை மிக சிரமமாக்கி விடும்.

"ஐந்தாண்டுத் திட்ட வெற்றிக்கு ரொக்க வசதி பெருகுவது அவசியம். அதற்காக தியாகங்கள் செய்ய வேண்டியதுதான்.

"ஆனல் அந்த தியாகம் பெரும்பாலோரின் சக்தியை மீறியதாகிவிடுமோ என்றுதான் அஞ்சவேண்டியிருக்கிறது. சேமிப்பு பெரிய அளவில் அதிகரிக்கும் என்று உறுதியாகச் சொல்வதற்கில்லை. ஆனல் பணவீக்கமும், அதன் விளைவாக வாழ்க்கைப் பண்டங்களின் விலைவாசி உயர்வும் நிச்சயமாகக் கூடுதலாகி கஷ்டத்தைப் பரப்பக்கூடும்"

★

### 'நவ இந்தியா':

"புதிய 'பட்ஜெட்'டில் சுமார் 90 பொருள்களுக்குக் கலால் வரி அதிகரிக்கப்பட்டுள்ளது. சர்க்கரை, காப்பி, தேயிலை, மண்ணெண்ணெய், நெருப்புப் பெட்டி, காகிதம் முதலான பொருள்களுக்கும் தீர்வைகள் அதிகரிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றை ஆடம்பரப் பொருட்கள் என்று யாரும் கூற மாட்டார்கள். அன்றாட வாழ்க்கையின் அத்தியாவசியத் தேவையாக இவை இருந்துவருகின்றன. இவற்றுக்கு தீர்வைகளை அதிகரிப்பதால், சாதாரண ஏழை ஜனங்கள்தான் அதிகம் பாதிக்கப்படுகிறார்கள். சர்க்கார் விதிக்கும் அதிகப்படி வரி அவர்களிடம் இருந்துதான் வசூலிக்கப்படுகிறது.

இரயில் கட்டணங்கள் மீது வரி விதித்திருப்பது மற்றொரு பெரிய அநீதி. சாதாரணமாக இரயில்வே கட்டண உயர்வுகள் இரயில்வே 'பட்ஜெட்'டில்தான் உயருவது வழக்கம். சாமான்கள் கட்டணத்தின்மீது உபரி 'சர்சார்ஜ்' அதிகரிக்கப்பட்டதும் இரயில்வே வரவு-செலவில்தான் காட்டப்பட்டிருந்தது. ஆனல் பிரயாணிகள் கட்டணத்தின் மீது இப்போது வரி விதித்திருப்பது, பொது 'பட்ஜெட்'டில் காட்டப்பட்டுள்ளது.

"இதன் மூலம் கிடைக்கும் அதிகப்படி வருமானம் முழுதும் பொதுச் செலவுகளுக்குக் கிடைக்க வேண்டுமென்ற நோக்கத்துடன்தான் இவ்வாறு வரி விதித்திருக்கிறார்கள் என்று கருதுகிறோம்.

"சர்க்கார் திட்டம் எதுவாயிருந்தாலும் சரி; அவர்கள் இதை இரயில்வே வரவு-செலவில் காட்டினலும், பொது பட்ஜெட்டில் காட்டினலும், பணம் செலுத்த வேண்டியவர்கள் பொதுமக்கள்தாம்.

"இன்றைய பிரயாணிகள் கட்டண வருமானத்தில் பெரும் பகுதி மூன்றாவது வகுப்புப் பிரயாணிகளிடமிருந்துதான் கிடைக்கிறது. இந்த வகுப்பில் பிரயாணம் செய்பவர்கள் மத்தியதர வகுப்பினரும் குறைந்த வருமானக்காரர்களுமேயாம். இவர்கள் பிரயாணம் செய்வதும் அத்தியாவசியத்தை முன்னிட்டேயன்றி உல்லாசப் பொழுதுபோக்குககாக அல்ல.

"பிரயாணிகள் கட்டணத்தின் மீது வரி விதிப்பதால் அவர்கள்தான் அதிகமாகப் பாதிக்கப்படுகிறார்கள். கடந்த ஐந்தாண்டுகளுக்குள் பிரயாணிகளின் கட்டண விகிதம் சுமார் 30 சதவிகிதத்திற்குமேல் அதிகரிக்கப்பட்டிருக்கிறது. அத்துடன், தற்போதைய வரி விதிப்பின் மூலம் பிரயாணச் செலவுகளை மேலும் 5 முதல் 15 சதவிகிதம் வரி அதிகரிப்பது கொஞ்சம்கூட நியாயமற்றது.

"பொதுவாக இந்த பட்ஜெட் தனியார் துறையில் ஊக்கக் குறைவை உண்டாக்குவதுடன், பொது ஜனங்களுக்கு வாழ்க்கைச் செலவையும் அதிகரிக்கச் செய்கிறது. தேசிய அபிவிருத்திக்குத் தியாகம் அவசியம்தான்; ஆனல், அது சக்திக்கு மிஞ்சியதாக இருக்கக்கூடாது. என்றாலும், தற்போதைய புது வரிகள் சாதாரண ஜனங்களையும் அவர்களது சக்திக்கு மிஞ்சிய தியாகம் செய்யும்படி கேட்டதாகவே இருக்கிறது. அது சாத்தியமா என்பதை சர்க்கார் சிந்திக்க வேண்டும்."

★

### 'சுதேசமித்திரன்':

"இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம் இனிது நிறைவேற வேண்டுமென்றே அனைவரும் கோருகின்றனர். ஆனல் இதற்கான சாதனங்களை திரட்டுகையில் சமுதாயத்தில் ஒவ்வொரு பகுதியினருக்குமுள்ள சக்தியையும் நினைவில் கொள்ள வேண்டும். ஏற்கெனவே வாயைக் கட்டி, வயிற்றை ஒடுக்கி வந்திருக்கும் மக்களிடம் இன்னும் எந்த அளவு தியாக சக்தி எஞ்சியிருக்கிறதென்பது சிந்திக்க வேண்டிய விஷயம்.

"சாதாரண ஜனங்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதே ஐந்தாண்டுத் திட்டங்களின் அடிப்படையான நோக்கம்; ஆனல் அத்திட்டங்களை நிறைவேற்றிவைக்க அவர்களிடம் ஏற்கெனவே சொற்பமாக உள்ள வாழ்க்கை வசதிகளையும் பறிப்பதைத் தவிர வேறு வழியில்லையென்றால், அவர்களுக்கு அத்தகைய திட்டங்களில் உற்சாகம் பெருகுவது சாத்தியமா?

"ஜனங்களைத் தாங்க முடியாத சோதனைக்குட்படுத்துவதற்குப் பதிலாக, அத்திட்டத்தின் பரிமாணத்தை நமது சக்திக்கேற்றவாறு ஓரளவு சுருக்கிக்கொள்வது உசிதமல்லவா என்று மத்திய சர்க்கார் தீவிரமாக யோசிக்க வேண்டுகிறோம்."

## கேரளத்தில் கம்யூனிஸ்டுகள் வெற்றி பெற்றதற்குக் காரணம்?

### இலங்கையில் நேருவின் கண்ணோட்டம்

கொழும்பு, மே 20—

"கேரளம் கம்யூனிஸ்டுகளிடம் சரணடைந்து விட்டது என்று கூறுவது சரியல்ல; கேரள சட்டசபையில், சரிபாதியான அளவுக்கு இடங்களைப் பிடித்துக்கொண்டு, மற்றும் சில சுயேச்சை—அனுதாபிகளின் ஆதரவையும் பெற்று கேரளத்தின் ஆட்சிபீடத்தில் கம்யூனிஸ்டுகள் அமர்ந்திருக்கின்றனர் என்று கூறுவதே சரியாகும்.

"இது, இந்தியாவின் அரசியல் துறையில் ஏற்பட்டுள்ள மாறுதல்களாலோ, அன்றி விரிவான வேறெந்த அரசியல் கொள்கை மாறுபாடுகளாலோ ஏற்பட்டதாகி விடாது. அந்த மாநிலத்திற்குள்ளாகவே ஏற்பட்டுள்ள சில உள்நாட்டு விவகாரங்களை யொட்டின நிகழ்ச்சியின் விளைவே இது என்று நான் கருதுகிறேன்."

—இவ்வாறு இந்தியப் பிரதமர் நேரு பண்டிதர், கொழும்புவில் பத்திரிகை நிருபர்களிடை பேசுகையில் கூறியிருக்கிறார்.

சோஷலிசத்தை எதிர்நோக்கி நடைபோட்டுச் செல்லும் இந்திய சர்க்காரின் நடவடிக்கைகளுக்குத் தோளோடு தோள் கொடுத்து கேரள சர்க்கார் நடைபெறுமா என்ற பிரச்சினையைப் பொறுத்தவரையில், கேரள கம்யூனிஸ்டு சர்க்கார் எதிர்காலத்தில் எப்படி எப்படி நடைமுறையில் இயங்குகிறதோ அதை அடிப்படையாகக் கொண்டுதான் உறுதி கூற முடியும் என்றும், கேரள சர்க்காரும் தாங்கள் அவ்வாறே—இந்திய அரசியல் சட்டத்திற்குட்பட்ட முறையில் தங்கள் உதவிகளைச் செய்வதாகத் திரும்பத் திரும்பக் கூறி வருகின்றனர் என்றும் அவர் குறிப்பிட்டதாகத் தெரிகிறது.

"இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கேரளத்திற்குத் தேவையான பணம் ஒதுக்கவில்லை என்று அந்த மாநிலத் தலைவர்கள் கூறும் புகாருக்குத் தாங்கள் என்ன சொல்லப் போகிறீர்கள்?"

என்று, ஒரு நிருபர் அவரைக் கேட்டபோது, 'இந்திய யூனியனில் உள்ள ஒவ்வொரு மாநிலமும் இப்படியேதான் சொல்லுகின்றன; என்றாலும் எங்களால் ஆனவரையிலும் அவர்களுக்கு உதவி செய்வோம்' என்று குறிப்பிட்டாராம்!

---

**சின்னாளப்பட்டி கே. வி. கே. சாமி நினைவு படிப்பகத் திறப்பு விழா**

22—5—57 மாலை 4 மணிக்கு, சின்னாளப்பட்டி—கிழக்கோட்டையில், மேற்படி படிப்பகத் திறப்பு விழா தோழர் ஏ. எம். டி. நாச்சியப்பன் தலைமையில் நடைபெறும்; அதுபோது, பேராசிரியர் க. அன்பழகன் எம்.எல்.ஏ. அவர்கள் படிப்பகத்தைத் திறந்துவைத்து சிறப்புரையாற்றுவார்.

---

**பரமக்குடி—எமனேசுவரம் அண்ணு படிப்பக ஆண்டு விழா**

21—5—57 இரவு 7 மணிக்கு, மேற்படி படிப்பக 3-வது ஆண்டு விழா, எமனேசுவரம்—பரிசத் சங்கம் முன்பு தோழர் என். எஸ். இராசாராம் தலைமையில் நடைபெறும். தோழர்கள் க. அறிவழகன், ஏ. செல்லச்சாமி, விந்தியவீரன், நித்யானந்தம், நாகலிங்கம் ஆகியோர் பேசுவர்.

## 'எதிர்கால சமுதாயத்திற்கும் விபத்துக்களை விளைவிக்காதீர்'

### வல்லரசுகளின் நடவடிக்கை பற்றி இரு பிரதமர்கள் வருத்தம்

கொழும்பு, மே 20—

உலகில் இப்போது வாழும் மனித சமுதாயத்திற்கு மட்டுமல்லாமல், எதிர்கால சமுதாயத்திற்கும், தெரிந்தோ, தெரியாமலோ அபாயங்களையும் விபத்துக்களையும் விளைவிக்கக்கூடிய நடவடிக்கைகளை பெரிய வல்லரசுகள் தவிர்க்காததைக் குறித்து வருந்துவதாக இந்தியப் பிரதமர் பண்டித நேருவும், இலங்கைப் பிரதமர் பண்டாவும் கூட்டாக வெளியிட்டுள்ள அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

அணு, நீர்வளிக்குண்டு சோதனைகளை உடனடியாக நிறுத்த வேண்டும் என்றும், இவற்றை அறவே ஒழிப்பதற்கு இது பூர்வாங்கமான கோரிக்கை என்றும் அவ்வறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

---

## பாராட்டுக் கூட்டம்

22—5—57 மாலை 6 மணிக்கு மதுரை மாவட்டம்—தேனி, கிழக்குச் சந்தையில், தோழர் ஏ.வி.பி. ஆசைத்தம்பிஎம்.எல்.ஏ. தோழியர் சத்தியவாணிமுத்து எம்.எல்.ஏ. ஆகியோரைப் பாராட்டி, தோழர் ஆ. கருப்பையா தலைமையில் ஓர் பொதுக் கூட்டம் நடைபெறும்; அதுபோது இலட்சிய நடிகர் எஸ்.எஸ். இராசேந்திரன் பாராட்டுரை வழங்குவார். தோழர் ஏ.வி.பி. ஆசைத்தம்பி எம்.எல்.ஏ., தோழியர் சத்தியவாணிமுத்து எம்.எல்.ஏ. நன்றியுரை ஆற்றுவர்.

---

**சென்னை—புதுப்பேட்டை அழகிரி நினைவு மன்ற செயற் குழு உறுப்பினர்களுக்கு:**

★

22—5—57 இரவு 7-30 மணி அளவில் மேற்படி மன்ற செயற்குழுக் கூட்டம் மன்றப் பணிமனையில் நடைபெறும்.

---

## துலாக்கோலைத் தூக்கிப் பிடித்தாராம்!

ஏற்பட்ட் நிலைமை பற்றி மத்திய நிதி அமைச்சர்

புதுடில்லி, மே. 20—

மத்திய அரசாங்க நிதிஅமைச்சர் டி. டி. கிருஷ்ணமாச்சாரி, ஒரு பெரிய வியாபாரிமீது 25 வழக்குகள் தொடர்ந்ததில், சோர்ட் தடை உத்தரவுமூலம் 24 வழக்குகளில் அரசாங்க நடவடிக்கைகளை நிறுத்திவைக்க அந்த வியாபாரி முனைந்து வெற்றி பெற்றுவிட்டாராம்.

பாக்கியுள்ள ஒரு வழக்கில் அந்த வியாபாரியை எப்படியும் பிடித்துவிட முடியும் என்று தன்னுடைய செயலாளர் கூறுவதை டி. டி. கே. நம்புவதாக நிருபர்கள் மகாநாட்டில் தெரிவித்துள்ளார்.

---

## 'பாரத மாதா'வுக்கு தத்துப் பிள்ளைகள்!

பாட்னா, மே 20—

கடந்த பொதுத் தேர்தலில் காங்கிரஸ் வெற்றிக்காக உழைத்தவர்களை காங்கிரஸ் இயக்கத்துடன் இணைக்கும்படி எல்லா மாநில காங்கிரஸ் குழுக்களுக்கும் அறிவிக்கப்பட்டுள்ளதாகத் தெரியவருகிறது.

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் செயலாளர் ஸ்ரீமந்நாராயணனின் ஆள்தேடும்படலத்தின் முதல் செயல் முறை திட்டமாம் இது!

---

## அதுவும் வடநாட்டில்!

புதுடில்லி, மே 18—

மர விளையாட்டுச் சாமான்களை உற்பத்தி செய்வதற்காக முன்னேற்ட உற்பத்தி நிலையமொன்று பம்பாயில் அமைக்கப்பட்டிருக்கிறதாம்!

இந்த நிலையம் 1956 நவம்பர் 1-ந் தேதியிலிருந்து வேலை செய்துவருகிறது என்றும், 1958 மார்ச் வரை இந்த நிலையத்துக்காக மொத்தம் ரூ. 67,400 செலவிட உத்தேசிக்கப்பட்டிருக்கிறது என்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

---

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24. சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ.

